
ராணி
காமிக்ஸ்
ஜேம்ஸ்
பாண்ட்
துப்பறியும்,
கதிர்
வெடி!
ரூ.



# 15 ஆகஸ்டு

சுதந்திரச் சுடர்
நாட்டு விடுதலை வீரர் ஏற்றியது.
கோடி கோடி இதயங்களில் ஒளிர்வது—
எந்தப் புயல் இதை எப்படி அணைக்கும்?

இந்தச் சுடர் ஒளி கொண்டே நம் விதியை
மாற்றி விடுதலை கண்டோம்.
இந்தச் சுடரொளி நம் வலிமையைப் பெருக்கி
தன்னிறைவு தரும் ஒளி.

இந்தச் சுடர் ஒளி
நமக்கு என்றும் வழிகாட்டும் ஒளி.

**நமது சிரஞ்சீவிச் சுடர்**

davp 85/166

ராணி காமிக்ஸ் — 29
(மாதம் இருமுறை இதழ்)

செப்டம்பர் 1—14
1985
































அவளை காப்பாற்ற ஜேம்ஸ்பாண்ட் வருவாரா?

நிச்சயம் வருவார். ஜேம்ஸ் இந்தப் பெண்ணை பெய்ரூட்டில் இருந்து பம்பாய் வரை பின் தொடர்வதா சிங் சுவாங் சொன்னாரே!




தன் நிலையை அறிந்த அவள், தன்னை கழுகுகள் கொத்தி குதற வருவதைப் பார்த்துப் பதறினாள்.


பிணப் தின்னி கழுகுகளிடம் இருந்து தப்பிக்க அவள் கதறினாள்!
உதவி! உதவி! காப்பாற்றுங்க!


கோட்டையின் கீழ்...
ஜேம்ஸ் பாண்ட் எப்படி வருவார்?
எப்படி வந்தாலும் சரி, நாம் தயாரா இருக்கணும்!




திடீர் என்று ஜேம்ஸ்பாண்ட், ஒரு மினி ஹெலிகாப்டரில் அங்கே வந்தார்!


காப்பாற்றுங்க! பிளீஸ்!



ஜேம்ஸ்பாண்ட் வந்து அந்தப் பெண்ணை காப்பாற்றுவதை சிங் சுவாங் ஆட்கள் பார்த்து—
அதோ ஜேம்ஸ்பாண்ட்! சுடுங்க!




அல்லாதான் உங்களை அனுப்பி இருக்கார்!




ஜேம்ஸ்பாண்ட் அந்தப் பெண்ணை அலாக்காக தூக்கினார்!
அவனை சுடுங்க! காப்பாற்றுவதை தடுங்க! உம்...!




ஐயோ! அவர்கள் தப்பித்தால் சிங் சுவாங் நம்மை கொன்று விடுவாரே!




துப்பாக்கி குண்டுகளில் இருந்து தப்பித்த ஜேம்ஸ், அவளை தூக்கிக்கொண்டு பறந்தார்!




பம்பாய் சாந்தா குரூஸ் விமான நிலையம்.
பம்பாய் வந்த இன்னொரு விமானத்தில் திடீர் கோளாறு!


விமானம் திடீர் என்று தீ பிடித்துக் கொண்டது!


பம்பாயில் இறங்க வேண்டிய அந்த லண்டன் விமானம், வானத்தில் தீப்பிடித்து, அரபிக் கடலில் விழுந்து மூழ்கியது!


வெடிச் சத்தம் கேட்டது. அதன்பிறகு விமானத்துடன் தொடர்பு இல்லை!


அந்த விமானத்தில் இந்திய அணுசக்தி விஞ்ஞானி டாக்டர் ராய் இருந்தாராம்!


அரபிக் கடலில் ஒரு கப்பலில்...
சிங் சுவாங் அவர்களே! அந்த விமானம் தீப்பிடித்து எரிந்து கடலில் விழுந்துவிட்டது.
எல்லோரும் இறந்து இருப்பார்கள் அல்லவா?


லண்டன் உளவுத்துறை.
5–வது விபத்து இது! ஜேம்ஸ் பாண்ட் பம்பாயில் இருக்கார். அவருக்கு சொல்லுங்க!


பம்பாயில்...
உங்களுக்கு நன்றி.
என் பெயர் ஜேம்ஸ்பாண்ட். உன் பெயர் பாத்திமா கலித்தானே!


ஜேம்ஸ் அவளை ஒரு படகுக்கு கொண்டு வந்து இருந்தார்.
உன்னை பெய்ரூட்டில் இருந்து பின் தொடர்ந்து வருகிறேன்!
ஆமா! என் பெயர் உங்களுக்கு எப்படி தெரியும்?


ஓ! நீங்க இங்கிலாந்து உளவாளியா? என்னை பின் தொடர காரணம்?


எப்லிஸ் என்ற பயங்கர வாதிகள் பற்றி துப்பறிய!
எனக்கும் அவர்களுக்கும் எந்த தொடர்பும் இல்லை!


ஆனால் எப்லிஸ் பெயரில் யாரோ இந்த விமான விபத்து–களை ஏற்படுத்து–கிறார்கள்!
எதனால் அப்படி சொல்கிறாய்?


எப்லிஸ் என்ற அமைப்பு பாலஸ்தீன விடுதலைக்காக போராட அமைக்கப்பட்டு உள்ளது. பாலஸ்தீன விடுதலை வீரர்கள் இந்தியாவுக்கு ஆதரவானவர்கள்.


எப்லிஸ்சுடன் தொடர்பு இல்லை என்றால் நீ பம்பாய் வரக் காரணம்?


தாவூத் என்ற ஒரு உளவாளி எனக்கு ஒரு சங்கேத செய்தி அனுப்பினார். அதில், பம்பாய் வந்தால் எப்லிஸ் பெயரில் அராஜகம் செய்வது யார் என்று சொல்வதாக கூறி இருந்தார். தாவூத்தை சந்திக்கும்முன் சிலர் என்னை பிடித்து விட்டனர்.
நாம் இனி தாவூத்தை சந்திப்போம்.


இந்த கிட்டங்கியின் மேல் மாடியில்தான் தாவூத் வசிக்கிறார்.


என்ன ஒரே இருட்டா இருக்கு?


பயமா
இருக்கு!


விளக்கை போட்டு
தாலூத் அறைக்கு
நுழைந்தபோது—
ஒரு காட்டு
மிருகம் தாக்கிய
மாதிரி
இருக்கு!
இதுதான்
தாலூத் அறை.
அல்லா!
இவருக்கு
என்ன?


ஒரு
புலியின்
கால்
தடம்!
இதோ
சில
தடங்கள்!


விளக்கு
அணைந்து
விட்டதே!
பியூஸ்
போய்விட்டதா?
அல்லது...?


இருட்டின் நடுவே
ஒரு புலியின்
உறுமல் கேட்டது!
புலியேதான்!
நாம் மாட்டிக்
கொண்டோம்!


இந்த
சிகரெட்டு விளக்கை
பொருத்துகிறேன்.
இந்த
நாற்காலியை
தூக்கிக்கொண்டு
ஒரு கை
பார்க்கிறேன்.


பாத்திமா! என் பின்னால் வா!


ஒரு கையில் நாற்காலி இன்னொரு கையில் துப்பாக்கியுடன் ஜேம்ஸ்பாண்ட் சத்தம் வந்த இடத்துக்கு போனார்.
பாத்திமா என்னை ஒட்டியே வா. மெள்ள மாடிப்படி இறங்கிவிட்டால், பிறகு ஆபத்து இல்லை!


திடீர் என்று மீண்டும் புலியின் உறுமல் சத்தம் கேட்டது.




சத்தம் வந்த திசையில் ஜேம்ஸ் சுட்டார்.
ஜேம்ஸ்! உங்களுக்கு ஒன்றும் இல்லையே?
இல்லை. சிகரெட் லைட்டரை மீண்டும் கொளுத்தி பார்க்கிறேன்!


புலி பின்புறமா போய் இருக்க வேண்டும். ஏதோ கீழே விழுந்த சத்தமும் கேட்டது!


அது என்ன?


ஜேம்ஸ் அதை எடுத்தார்.
ஒரு சிறிய டேப் ரிக்கார்டர்.


அதன் பட்டனை அழுத்தியதும், அதில் இருந்து புலி உறுமும் சத்தம் கேட்டது.
ஓ! இதுதான் புலியா?


ஜேம்ஸ்! போய்விடு-வோம்.
தாவூத் கையில் ஒரு தாள் இருந்தது. அது என்னைக் குழப்புகிறது.


காரை நான் ஓட்டுகிறேன்


அந்த தாள் உங்களிடம் இருக்கிறதா?
ஆமா!


தாவூத் இறக்கும் நேரத்தில் அதை எழுதி இருக்க வேண்டும்


இந்திய உளவுத்துறை அதிகாரியுடன் பேசு–கிறேன்!
ஹலிரயா? புரியவில்லையே


ஹலோ! ஜேம்ஸ்பாண்ட்! உங்களை சந்திப்பதில் மகிழ்ச்சி.
விமானங்கள் சில விபத்தில் சிக்கியது பற்றி துப்பு துலக்குவதில் தீவிரமாக இருப்பீங்க!


மிஸ்டர் ரஞ்சித்! எப்லிஸ் பயங்கரவாதிகள் பற்றி துப்பு துலக்க பம்பாய் வந்தேன்!


விமான விபத்துக்கும் அவர்கள் காரணமா?
அப்படிதான் தெரிகிறது. இந்த பெயர் பற்றி உங்களுக்கு ஏதாவது புரிகிறதா?


ஓ! ஹலிரயா? இவர் இந்தியாவில் உள்ள மிகப்பெரிய தொழில் அதிபர்களில் ஒருவர்!
அவரது தனித்தன்மை என்ன?


உலகம் முழுவதும் அவருக்கு தொழில் இருக்கு. அரபு மன்னர்கள் போல் சுக போகத்தில் மிதப்பார் என்றும் ஒரு நாளைக்கு ஒரு இடத்தில் இருப்பார் என்றும் சொல்வார்கள்!


அவர் போட்டோ ஏதாவது இருக்கா?
உங்களுக்கு ஒரு படம் தருகிறேன்!


அவர் படம் கிடைப்பதே கஷ்டம். நாங்க கஷ்டப்பட்டு இந்த படத்தை சேகரித்தோம்.


புலியுடன் இருக்—காரே!
ஆமாம்! நமக்கு பூனை, நாய் போல அவருக்கு வளர்ப்பு பிராணி புலிதான் அவரது சொந்த ஊர் மைசூர்!


கேட்க சுவாரசியமா இருக்கு. பூதக்கண்ணாடியில் பார்த்தால் இன்னொரு சுவாரசியமான விஷயம் தெரியுது?!
ஹூலிரயா என்றால் புலி மன்னன் என்றுதான் கன்னடத்தில் அர்த்தம்.

ஹாலிரயாவைப் பார்த்தால் மைசூர்காரர் மாதிரி தெரியவில்லை. ஒருவேளை வெளி நாடுகளில் சுற்றிக்கொண்டு வசதியா இருப்பதால் அப்படி இருக்காரோ?

இந்தியர்கள் பலவித தோற்றம் கொண்டவர்கள்.







இங்கிலாந்து உளவுத்துறையில் மிஸ்டர் "எம்" மிடம் கிரேசி!

ஹாலிரயா என்பவர் பற்றி பம்பாயில் இருந்து ஜேம்ஸ் பாண்ட் அனுப்பிய செய்தி!







ஹாலிரயாவின் சொகுசு கப்பல் பெயர், திப்பு. சமீபத்தில் இந்திய விமானம் கடலில் விழுந்தபோது, திப்புவை அரபிக் கடலில் நமது கடற்படை கப்பல் பார்த்து இருக்கு!
கப்பல் திப்புவை கடற்படை கண்காணிக்கிறதா?


இல்லை. திப்பு இப்போது பம்பாய் போய் விட்டது!
வெரிகுட்! அப்படியானால் அந்த கப்பலுக்கு போய் ஹாலிரயாவை சந்தித்து விடுகிறேன்!


பிறகு—
செய்தி நிறுவனத்தில் இருந்து ஹாலிரயாவை பேட்டி காண வருகிறேன்.


ஹாலிரயா கப்பலில் இல்லை!
இப்போது—தான் அவர் பம்பாய் திரும்பியதாக எனக்கு தகவல்!


ஆமா! ஆனால் கப்பல் கரைக்கு வந்ததும் அவர் வெளியே போய்விட்டார்!
அப்போ அவரை பேட்டி காண முடியாது!


பரவாயில்லை. விலை உயர்ந்த அவர் கப்பலை சுற்றிப் பார்த்துவிட்டு எழுதுகிறேன்!


ஏய் மிஸ்டர்! இந்தக் கப்பல் பத்திரிகைகாரர்கள் பார்வைக்கு அப்பாற்பட்டது. இது கப்பல் உரிமையாளரின் உத்தரவு. எனவே கப்பலை விட்டு வெளியே போங்க!
இந்த கப்பலில் நான் சில படங்களை எடுத்தால் மிஸ்டர் ஹாவலிரயா எதிர்ப்பு தெரிவிக்க மாட்டார்!


நான் சொல்வது காதில் விழ வில்லையா?


ஏய்! கெட் அவுட்!


ஜேம்ஸ், கப்பல் கேப்டனை தாக்கினார்.


அவனை வெளியே தள்ளுங்க.
நானே போகிறேன்!

இந்திய உளவுத்துறையில் 007

சாந்தா குரூஸ் விமான நிலையம் போனீர்களா?

ஆமா! ஹாலிரயா தனது சொந்த ஜெட் விமானத்தில் இன்று காலை பம்பாயில் இருந்து போய் இருக்கிறார்.

எங்கே போனார் என்று தெரியவில்லை.

அதை கண்டு பிடிப்பது கஷ்டம் இல்லை. நான் கேட்டு சொல்கிறேன்.

குவைத்!

பம்பாய் விமான நிலையம்.

ஜேம்ஸ்! நான் குவைத் போய் ஹாலிரயா எங்கே இருக்கிறார் என்று கண்டு பிடிக்கிறேன்.

பாத்திமா, நீ எச்சரிக்கையா இருக்கணும். நான் லண்டன் போகிறேன்.


லண்டனில்...
ஜேம்ஸ் வா! நீ சொன்னபடி மிஸ்டர் ஹூலிரயா பற்றி சில தகவல்களை சேகரித்து உள்ளோம்.


ஹூலிரயா பெரிய எண்ணை அதிபர். கப்பல் கம்பெனியும் வைத்திருக்கார். ஆயுத தொழிற்சாலையும் நடத்துகிறார்.
இந்திய விமான விபத்துகளுடன் தொடர்பு இருக்கா?


விபத்தில் சிக்கிய ஒரு விமானத்தில் இந்திய அணுசக்தி விஞ்ஞானிகள் இருந்து இருக்காங்க!


மற்ற விமானங்களில், ஹூலிரயாவின் தொழில் எதிரிகள் இருந்து இருக்காங்க!


அப்படியானால், எப்லிஸ் புரட்சியாளர் பெயரில் மிஸ்டர் ஹாலிரயா தன் தொழில் எதிரிகளை தீர்த்து கட்டி இருக்கார். இல்லையா?
அது சரிதான்! ஆனால் இந்திய அணுசக்தி விஞ்ஞானிகளை கொல்ல காரணம் என்ன?


அவர் இந்தியாவுக்கு எதிரான ஒரு நாட்டின் உளவாளியாக இருக்க வேண்டும்.
சரி. புலி தாக்கினவர்கள்?


அதுக்கும் ஹாலிரயாவுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். திப்பு என்பது அவர் கப்பல் பெயர். திப்பு சுல்தானின் படை வீரர்கள் புலி வீரர்கள் என்றுதான் அழைக்கப் பட்டனர்.


மிஸ்டர் ஹாலிரயா தன்னை, மறைந்த திப்பு சுல்தானின் மறுபிறவி என்று நினைத்து செயல் படுகிறாரா?
ஆனால் ஒரு முக்கிய பாயிண்ட் உதைக்கிறது!


மைசூர்காரர் ஆன அவர், ஏன் இந்தியாவுக்கு எதிரா செயல் படணும்?


இந்த போட்டோவில் சீன உடையில் இருக்கிறார்?
அப்படியானால் அவர் சீனரா? இந்தியர் போல் நடிக்கிறாரா? எல்லாம் மர்மமா இருக்கே!


ஹூலிரயா ஏன் கை உறை அணிய வேண்டும்? இந்திய சீதோஷ்ண நிலையில் அது தேவை இல்லாதது!


அப்படியானால் கை உறை எதை மறைக்க?
ஒருவேளை அவர் கை மனிதர்களின் கை போல் இருக்காதோ?


ஜேம்ஸ்! என்னப்பா குழப்புகிறாய்?
அவர்... கைகள் இரும்பு கைகளா?


கை இல்லாத ஹூலிரயா, மின் அணு, இரும்பு கைகளுடன் செயல்படுகிறார். அதை மறைக்க கை உறை அணிந்து உள்ளார். அதுதானே ஜேம்ஸ், உன் பாயிண்ட்!
ஆமா! கப்பலில் அவர் அறையில் ஒரு "விக்" முடியையும் பார்த்தேன்.


அப்படியானால் அவர் மொட்டை தலையரா?
ஆமாம்! அதை மறைக்க "விக்" அணிகிறார். சீன உடையில் உள்ளார்!


அவர்தான் டாக்டர் நோ!
ஜேம்ஸ், நீ என்ன சொல்கிறாய்?


ஜேம்ஸ்! என்னப்பா புது குழப்பம்? டாக்டர் நோவைதான் கொன்று விட்டாயே!
இப்போது அவர் உயிரோடு இருப்பதா எனக்கே சந்தேகம் வருகிறது!


பறவைத் தீவில் அவர் மீது டன் டன்னாக கனிமம் கொட்டப்பட்டது. ஒரு வேளை தாங்கும் சக்தி பற்றி ஆராய்ந்த அவர், அதை தாங்கி, பிழைத்து இருக்கலாம்!


கமாண்டர் ஜேம்ஸ்பாண்டுக்கு அவரது ரகசிய போன் நம்பருக்கு ஒரு வெளிநாட்டு போன் அழைப்பு!


கிரேசி! பாத்திமா என்ற ஒரு பெண்ணுக்கு இந்த ரகசிய போன் நம்பரை கொடுத்து விட்டு வந்தேன்!
அந்த போன் "கால்" தான்கிர் என்ற இடத்தில் இருந்து வந்துள்ளது.


அலோ!
பாத்திமாவா?
நான் ஜேம்ஸ்தான்
பேசுகிறேன்!
ஹலிரயா பற்றி
ஏதாவது தகவல்
கிடைத்ததா?


அவர் இங்கிருந்து
மொரோக்கோ போகப்
போவதாக தெரிகிறது.


ஆமாம்!
சரி!
அவர்
தான்கீரில்
தான் தங்கி
இருக்காரா?


இங்கே
ஒரு பங்களா
உள்ளது. அது ஒரு
பணக்கார
இந்தியருக்கு
உரியதாம். பெயர்
புலி
மாளிகை!
சரி!
நான் அங்கே
வருகிறேன்!


அப்போது


பாலஸ்தீன
விடுதலை படை
உளவாளி
பாத்திமா
பேசினள்.
ஹலிரயா
விமானம்
தாங்கீரில்
உள்ளதாம்!


அவரது தலைமை நிலையம் எது என்றே தெரியவில்லை. இன்னொரு பெரிய மர்மம். நடுவானில் விமான விபத்துக்கள் எப்படி ஏற்படுகின்றன என்பதுதான்!


எனக்கு இந்த நேரத்தில் ஒன்று நினைவு வருது சார்!


அது என்ன மிஸ்டர் வில்லியம்?
அது அமெரிக்க ஒளி இயல் விஞ்ஞானி ஜேக்சன் பற்றியது.


இந்த விமான விபத்துகள் தொடங்கும் முன், ஹாலிரயாவின் கம்பெனி ஒன்றில் அவர் சேர்ந்து இருக்கார்!
சரி! உங்க பாயிண்ட் என்ன?


ஜேக்சன் வேலையை விட்டு விலகியதும் தாங்கீர் தான் போய் இருக்கார்!
ஹாலிரயாவும் அங்குதான் இருக்கார். இல்லையா?


ஹாலிரயாவுக்கும், ஜேக்சனுக்கும் தொடர்பு இருக்கலாம் என்று சந்தேகம் இல்லையா?
ஆமா சார். அதனால் ஜேம்சை தான்கீர் அனுப்புவோம்.

தாங்கீர் உள்ள மொராக்கோ
நாட்டுக்கு 007 சென்றார்.

அதோ
அவன்
வருகிறான்! ?

அவர்கள் இருவரும்
007–ஐ நெருங்க—

ஜேம்ஸ்
சார்! உங்க
பெட்டியை
கொடுங்க!

ரொம்ப
நன்றி. நான்
பாத்திமா என்ற
பெண்ணுக்காக
காத்து நிற்–
கிறேன்.
அவளைப்
பற்றி உங்களுக்கு
தெரியுமா?

பாத்திமா
காலித்தானே?

அவளைப் பற்றி
நீர்தான் சொல்ல
வேண்டும்!


ஜேம்ஸ்பாண்ட்! நீர் கொடுத்த நம்பருக்கு அவள் போன் செய்த பின் மாயமாய் மறைந்து விட்டாள்!
அவள் என்னுடன்தான் பேசினுள்!


அதனால்தான் அவளை சந்திக்க இங்கே வந்தேன்.
சரி! இங்கிருந்து அவளுடன் எங்கே போக திட்டம்?


பாத்திமா என்னை "புலி மாளிகை" என்ற வீட்டுக்கு அழைத்துச் செல்ல இருந்தாள்.


அவள் உம்முடன் பேசிய பின் காணுமல் போய்விட்டதால் உம் மீது சந்தேகமா இருக்கு!
அங்கே நாங்களே உம்மை அழைத்துச் செல்கிறோம்.


நீங்க நினைப்பது தவறு. அவளை எப்படியும் கண்டுபிடிப்போம்!


ஜேம்ஸ்! கையை வெளியே எடும்!
எனக்கு இன்னொரு விஷயம் பற்றி நீங்க தகவல் கொடுக்கணும்!


இந்த ஹூலிரயா என்பவரின் கம்பெனிகள் இங்கே என்ன என்ன இருக்கு என்று எனக்கு தெரிய வேண்டும்!


புலி மாளிகை என்ற இடத்தில்தான் அவரது கம்பெனி அலுவலகம் இருக்கு!


ஜேம்ஸ்! இதுதான் புலி மாளிகை. போய் வாரும். தப்பிக்க நினைத்தால் உம் உயிர் உமக்கு இல்லை.


மிஸ்டர் ஹூலிரயா கம்பெனி இது தானே?
யாரை பார்க்க வேண்டும்?


டாக்டர் ஜேக்சன்.
சரி உள்ளே வாங்க!


எல்லாமே நவீன அமைப்புகள். வருவோர் போவோரை கண்காணிக்க டெலிவிஷன் கருவி!


ஆனால் இந்த மாளிகையின் பாதுகாப்பு இந்த புலிதான்.


டாங்களா உள்ளே...
நமது புலித் தலைவருக்கு ஒரு செய்தி!


பாஸ்! டாக்டர் ஜேக்சனை பார்க்க ஜேம்ஸ்பாண்ட் வந்து இருக்கார்.


நமது திட்டத்தை பாதிக்கும் வகையில் ஏதாவது செய்து விடாதே!
செய்ய மாட்டேன், பாஸ்!


சார் உங்களிடம் பேச கம்பெனி செயலாளர் இங்கே வருகிறார்.


நான் ஜேக்சனை பார்க்க வேண்டும்!
நான் கம்பெனி காரியதரிசி. பெயர் சுனில் சாட்டர்ஜி. உங்களுக்கு என்ன வேண்டும்?


அவர் திறமை போதாததால், அவரை அனுப்பிவிட்டோம்.
இப்போ அவர் எங்கு இருக்கிறார்?


தெரியாது. நீங்க போகலாம்.


ஜேம்ஸ்! வேலை முடிந்ததா?
பாத்திமா, இங்கேதான் இருக்க வேண்டும் என்று எனக்கு சந்தேகம்


வேண்டாம்! உள்ளே போகாதே. அங்கே பலத்த பாதுகாப்பு உள்ளது.


அதற்கு வேறு வழி சொல்கிறேன்.
பாத்திமாவை இங்கே விட்டுவிட்டு போவதா?


விமான நிலையத்தில்...
ஜேம்ஸ்! உங்க பார்சலை ஏற்றியாச்சு.
இதுக்குள் இருக்கும் மினி ஹெலிகாப்டர் பாகங்களை இணைக்கணும்.


ஒரு பெரிய டிரில்லிங் இயந்திரமும், வேண்டும்!
அதற்கு ஏற்பாடு செய்கிறோம்.


புலி மாளிகை முன் போய், நாங்க இரண்டு பேரும் ரோடு வேலை ஆட்கள் போல் துவாரம் போட வேண்டும், இல்லையா?
ஆமா. நான் மாளிகைக்குள் நுழைவேன்!


அன்று இரவு புலி மாளிகை முன் 2 பேர் வந்து ரோடு வேலை நடப்பதற்கான தடைகளை வைத்தனர்.


பிறகு ரோட்டில் துவாரம் போட்டனர்.




டிரிலிங் இயந்திரங்களின் சத்தத்தை பயன் படுத்தி, ஜேம்ஸ் அந்த வீட்டின் மாடியில் இறங்கினார்.


அதை ரோட்டில் வேலை செய்தவர்கள் பார்த்தார்கள்.
ஜேம்ஸ் பத்திரமா இறங்கி விட்டார்!


இங்கேயும் புலி வருமோ! எச்சரிக்கையா இருக்கணும்!


பாத்திமாவை எங்கே அடைத்து வைத்து இருக்காங்க?


வீட்டில் எந்த சத்தமும் இல்லையே. காரணம் என்ன?


பாத்திமா.
















Scanned by CamScanner


நான் ஒரு ஆயுதம் தயார் செய்கிறேன்!


புலி, பாத்திமாவை விட்டுவிட்டு ஜேம்சை நோக்கி வந்தது. அவர் அருகில் தொங்கிய திரைச்சீலையில் தீ வைத்தார்.


புலி அவர் மீது பாய்ந்தது.


புலியை பயமுறுத்த பாத்திமா சுட்டாள்.


ஜேம்ஸ் திரை சீலையால் புலியை தடுத்தார்.


ஜேம்ஸ் திரை சீலையில் நன்றாக தீயை மூட்டினார். பிறகு...




புலி
திகைத்தது.
கதவை
பார்த்து
போகிறது!


நன்ருக தீ பிடித்ததும், ஜேம்ஸ் திரையை புலி மீது வீசினர்!


ஓடு.


புலி
மீண்டும்
வருவதற்குள்
தப்பி ஓடி
விடுவோம்!


வீடு அமைதியா இருக்க காரணம் என்ன?


புலி உறுமியது. நீ 3 தடவை சுட்டாய். அப்படியும் ஒருவரும் வரவில்லையே!
புலியை காவலுக்கு விட்டுவிட்டு எங்கே போனார்கள்?


நீ இங்கே வந்தபோது ஹூலிரயா இருந்தாரா?


என்னை இங்கே கொண்டு வந்தபோது ஹூலிரயா கப்பலில் போய்விட்டதாக சாட்டர்ஜி யாரிடமோ போனில் கூறியதைக் கேட்டேன்.


பாலஸ்தீன விடுதலை இயக்க ஆபீசுக்கு வந்தனர்.
கடந்த 48 மணி நேரத்தில் தாங்கிரில் இருந்து போன கப்பல்கள் விவரம்!


ஜேம்ஸ்! ஹூலிரயா கம்பெனி கப்பல்கள் எது எது என்று கண்டுபிடிக்க வாரக் கணக்கில் ஆகும்.


இல்லே, பாத்திமா. இந்த கப்பல்?


எந்த கப்பல்?
சிர்கான் என்ற எண்ணெ கப்பல், அது.


அந்த கப்பல் பற்றி நீங்ககேட்க காரணம்?
கிப்ளிங்ஸ் எழுதிய 'ஜங்கிள் புக்' என்ற புத்தகத்தை படித்தது இல்லேயா?


அதில் உள்ளபடி சிர்க்கான் என்ருல் புலிக் கடவுள் என்று பொருள்!


நடுக் கடலில், அந்த கப்பலில்...
தாங்கீரில் இருந்து ஏதாவது செய்தி உண்டா?
பாத்திமா ரகசியமாக தீர்த்துக்கட்டப் படுவாள் என்று ஒரு செய்தி வந்தது. அதன்பின் தகவல் இல்லே.


வெரிகுட்! ஜேம்ஸ்பாண்டை காலப்போக்கில் கவனித்துக் கொள்ளலாம்.


நமக்கு இப்போ முக்கிய வேலை இருக்கு. வாஷிங்டனில் இருந்து என்ன செய்தி வந்தது?
அமெரிக்க ராணுவ இலாகாவில் இருந்து உங்களுக்கு தகவல் கொடுக்கும் ஏஜெண்ட் பேசினார். பெரும் புள்ளி புறப்படுவது உறுதி என்றார்.


அப்படி இருக்கும் போது அமெரிக்க உதவி ஜனாதிபதி பத்திரிகை நிருபர்களிடம் பேசினார்.
உங்க விமானத்தை நொறுக்கப் போவதாக எப்லிஸ் பயங்கரவாதிகள் அறிவித்து உள்ளனர். அதனால் மத்திய கிழக்கு நாடுகள் மாநாட்டில் கலந்து கொள்வீர்களா?
நான் நிச்சயம் அந்த மாநாட்டில் கலந்து கொள்வேன்! வாஷிங்டனில் இருந்து புறப்படும் என் திட்டத்தில் மாற்றம் இல்லை!


உதவி ஜனாதிபதி வாஷிங்டனில் இருந்து தனி விமானத்தில் போகாமல், நியூயார்க்கில் இருந்து பிரயாணிகள் விமானத்தில் போகிறார்!
அந்த வதந்தியை நானும் கேள்விப் பட்டேன்.


உளவுத்துறையுடன் 007 பேசினார்.
ஜேம்ஸ்! சிர்கான் என்ற அந்த கப்பல் ஹூலிரயாவின் கம்பெனிக்கு சொந்தமானது தான்!


ஆனால் ஹூலிரயா தான் டாக்டர் நோ என்பதை இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை!


ஜேம்ஸ்! நீ எப்படியாவது சிர்கான் கப்பலுக்குள் நுழைந்து ஹூலிரயா யார் என்று கண்டுபிடி. தலைவர் எம் அங்கே வருகிறார்!


பிறகு ஜேம்ஸ் ஒரு ஹெலிகாப்டர் மூலம் ஜிப்ரால்டர் பகுதிக்கு பறந்தார்.


தலைவர் எம் வருகிறார் என்றால் அதில் முக்கியத்துவம் இருக்கும்!
ஜேம்ஸ்! நான் இங்கே வர காரணம் இருக்கு!


அமெரிக்க உதவி ஜனாதிபதி விமானத்தை சுட்டு வீழ்த்த எப்லிஸ் பயங்கரவாதிகள் திட்டமிட்டு உள்ளனர்.
அதனால் சிர்கான் கப்பலை கைப்பற்றணும்!?

ஒரு கப்பலில் தலைவர் எம் விளக்கினார்.

மத்திய கிழக்கு நாடுகள் மாநாட்டுக்கு வரும் உதவி ஜனாதிபதி விமானத்தை நொறுக்குவதாக எப்லிஸ் பயங்கரவாதிகள் திட்டமிட்டு உள்ளனர்.

அதனால் உதவி ஜனாதிபதி, வாஷிங்டனில் இருந்து புறப்படவில்லை.

நியூயார்க்கில் இருந்து மற்ற பிரயாணிகளுடன் போக்குவரத்து விமானத்தில் வருகிறார்.

அந்த விமானம் பறக்கும் பாதை, சிர்கான் கப்பல் நிற்கும் இடத்துக்கு மேலாக உள்ளது!

சார்! நமது கடற்படை விமானம் ஒன்றில் இருந்து செய்தி வந்தது! சிர்கான் கப்பல் நிற்கும் இடம் தெரிந்து விட்டது!

ஜேம்ஸ்! உம் புறப்படு! அதிக வேகம் போகக்கூடிய ஒரு நீர்மூழ்கிக் கப்பல் தயாரா இருக்கு!

சிர்கான் கப்பலில் நீ நிகழ்த்த இருக்கும் வீரச் செயல், பல மர்மங்களை வெளிப்படுத்தும்.

எப்லிஸ் விடுதலை வீரர்களுக்கும் மர்ம விமான விபத்துகளுக்கும் சம்பந்தம் இல்லை என்று பாத்திமா கூறிவிட்டாள்.

ஜேம்ஸ் நீர்மூழ்கி கப்பலில் ஏறிக் கொண்டார்.
இங்கிருந்து 10 மைல் தூரத்தில் சிர்கான் கப்பல் நிற்கிறது!
இதே வேகத்தில் அதன் அருகே போ!

ஜேம்ஸ் சார்! இந்த ரப்பர் படகில் மிதந்துகொண்டு இருங்கள். சிர்கான் கப்பல் இந்த பாதையில்தான் வந்துகொண்டு இருக்கு!

சிர்கான் கப்பல்—
சார்! நம் வழியில் ஒரு ரப்பர் படகு தென்படுகிறது. அதில் ஒரு ஆள் இருக்கிறார்!

ரப்பர் படகு அருகே கப்பல் வந்ததும்...
என்னைக் காப்பாற்ற கப்பலை நிறுத்தியதற்கு நன்றி!

எங்களுக்கு நன்றி சொல்லாதே. கப்பலை நிறுத்தச் சொன்ன எங்க பாஸ்சுக்கு நன்றி சொல்!

அந்த ஆளை நல்லா சோதனை போடு!
எஸ் சார்!


உன் கப்பலுக்கு என்ன ஆச்சு?
கொதிகலன் வெடித்து கப்பல் 20 நிமிடத்தில் மூழ்கிவிட்டது.


ஏய்! அது என்ன? காலில் துப்பாக்கி?
நான் அதை எப்போதும் அணிந்து இருப்பேன். எங்கள் கப்பலில் அப்படி ஒரு பழக்கம்!


உம்...என் வேலையை ஆரம்பிக்கிறேன்!


அந்த திடீர் தாக்குதலால் நிலை இழந்த அந்த கப்பல் அதிகாரி கீழே மயங்கி விழுந்தார்.


இவன் துப்பாக்கியையும் எடுத்துக் கொள்கிறேன்...உம் இதென்ன குரல்...


அபாரம் ஜேம்ஸ்பாண்ட்! உன் வீரச் செயலை பார்க்கத்தான் காத்து இருந்தேன்!

திரையில் ஒரு உருவம் தோன்ற...
ஜேம்ஸ்! நமது கடைசி சந்திப்பு இது!
ஓ! இவர் தான் புலித் தலைவரா?
ஹூலிரயா என்ற பெயரின் அர்த்தத்தை தெரிந்து கொள்ள நீ ரொம்ப சிரமப்பட்டியாமே!
உன் நடவடிக்கைகளை நான் தொடர்ந்து கவனித்து வருகிறேன். அதாவது பம்பாயில் இருந்து!
இந்த வீடியோ திரையைச் சுற்றி பல குழாய்கள் நீட்டிக்கொண்டு இருப்பது உனக்கு தெரிகிறதா?
அவை எல்லாம் பல வகை துப்பாக்கி முனைகள். குண்டு, விஷ வாயு, திராவகம் இவற்றை வீசக்கூடிய நவீன துப்பாக்கிகள்!
அவை அனைத்தும் உன்னையே குறி வைக்கின்றன!
ஒன்றை சோதித்து காட்டுகிறேன், ஜேம்ஸ்!

ஒரு வாயு தாக்கி 007 மயங்கி விழுந்தார். பிறகு...

நாம் ஏற்கனவே சந்தித்து இருக்கோம் ஜேம்ஸ்!

ஆம் பறவைத் தீவில்! இந்த "விக்" முடியை அணியாமல் இருந்தபோது!

அந்த "விக்", கை உறை இவற்றுடன் நீர் இருந்தால், ஹூலிரயா, சிங் சுவாங்!

ஓ! அப்படியானல் நான் யார்?

நீர்...நீர் டாக்டர் நோ!

ஆமா ஜேம்ஸ்! முன்பைவிட சக்திவாய்ந்த இரும்புக் கையை பொருத்தி உள்ளேன்!

இவற்றை மூளை நரம்புகளால், மின் அணு கட்டுப்பாடு மூலம் சொந்த கை போல் இயக்க முடியும்.


வெறும் இரும்பு கையைவிட இந்த மின் அணு இயந்திர கை சக்திவாய்ந்தது தான்!


நான்தான் டாக்டர் நோ என்பது வெளி உலகத்துக்கு தெரியவே தெரியாது!


டாக்டர் நோ! இப்போது உம் திட்டம் என்ன?
எப்லிஸ் பயங்கரவாதி களின் கடைசி அறிவிப்பு உமக்குத் தெரியாதா?


ஆமா. அதுபற்றி நாம் பிறகு பேசுவோம்.
அமெரிக்க உதவி ஜனாதி-பதிக்கு எதிரான பயமுறுத்தல். அதுதானே?


முதலில் உம் அருமை "நண்பி" பாத்திமா என்ன ஆனாள் என்று பார்ப்போம்!


எனக்கு கடல் பிராணிகள், மனித உடல் தாங்கும் சக்தி இவற்றில் எல்லாம் ஈடுபாடு உண்டு.
அதைத்தான் நான் பறவைத் தீவில் நேரில் பார்த்தேனே!


இந்த கப்பல் நீச்சல் குளத்தில் உள்ள பயங்கர சுறுக்களை இங்கிருந்து பார்.


அந்த குளத்துக்கு வெளியே ஒரு பெண் தொங்கவிடப்பட்டு இருந்தாள்.
பாத்திமா!


ஜேம்ஸ்பாண்ட்! நீர் தாங்கிரை விட்டு புறப்பட்டு போனதும் இவளை பிடித்தோம். உம்மைப் போல் இவள் தொந்தரவும் தாங்க முடியவில்லை!


இனிமேல் நீரும் பாத்திமாவும் இங்கிலாந்து உளவுத்துறை, பாலஸ்தீன விடுதலை இயக்கம் இரண்டு பற்றியும் தகவல் சொல்லப் போறீங்க!


நான் சொல்வேன் என்று எப்படி எதிர் பார்க்கிறீர்?


பாத்திமாவை அங்குலம் அங்குலமாக தண்ணீருக்குள் இறக்குவோம். அப்போ உண்மையை சொல்ல மாட்டீரா?


கொஞ்சம் மாட்டு இறைச்சியை இறக்கியதும் என்ன நடக்கிறது என்று பாரும்! சுறுக்கள் இறைச் சியை எப்படி சுவைக்கின்றன?
சுறுக்களுக்கு பாத்திமா சதை ரொம்ப சுவையா இருக்கும்.


ஜேம்ஸ்! பாத்திமாவை குளத்துக்குள் இறக்கட்டுமா?
தலைவருக்கு அவசர செய்தி!


எஸ்! புலித் தலைவர் பேசுகிறேன்!
நடவடிக்கை எடுக்க நேரம் நெருங்கிவிட்டது! அனுமதி வேண்டும்!
அனுமதி வழங்குகிறேன்!


பாத்திமா! நீ அப்படியே கொஞ்ச நேரம் அந்தரத்தில் ஆடு!


ஜேம்ஸ்! மேலே வாரும். அங்கே என்ன நடக்கிறது என்று பாரும்!


ஜேம்ஸ், நீர் முதலில் போக வேண்டும்!
அந்த அமெரிக்க விஞ்ஞானி டாக்டர் ஜேக்சன் கதி என்ன ஆச்சு?


டாக்டர் ஜேக்சன்?


ஓ! அவர் ஒளி விஞ்ஞானத்தில் மேதை ஆச்சே! சூரிய கதிர் ஆராய்ச்சியில் அவர் பெரிய நிபுணர்!


டாக்டர் ஜேக்சனை 007 சந்தித்தார்.
டாக்டர்! இவை எல்லாம் என்ன?
ஜேம்ஸ்பாண்டுக்கு பதில் சொல்ல வேண்டுமா தலைவரே!
தாராளமாக சொல்லலாம். நடுக்கடலில் அவர் தப்பிக்க முடியாது. நம் கப்பல் கரையை அடையும் போது அவர் உயிரோடு இருக்கவும் மாட்டார்!
















Scanned by CamScanner


நான் விஞ்ஞானி. மதவாதி அல்ல!
அதாவது உங்க அறிவை பணத்துக்காக மனித இனம் அழிய பயன் படுத்துவீங்க.


மனித இனமாவது மண்ணாங்கட்டியாவது? மனித இனத்துக்கு நீங்க கொடுக்கிற மதிப்பு எங்களுக்கு தெரியாதா? டாக்டர்! "கதிர் வெடி முறையை பரிசோதித்து காட்டுங்க!


வேண்டாம்! கொலைகார அந்த கதிர் வெடி இயக்கத்தை காட்ட வேண்டாம்!
அதோ அந்த மீன் பிடிக்கும் படகின் மீது சூரிய கதிர்களை பாய்ச்சுவோம்!


ராடார், டெலிவிஷன் கண்காணிப்பு எல்லாம் தயாரா?


அடுத்த சில நிமிடத்தில் 2500 டிகிரி உஷ்ணத்தில் சூரிய கதிர் கற்றை ஒரு மீன் பிடி படகு மீது பாய்ச்சப்பட்டது!


"கதிர் வெடி" தாக்கி முதலில் அந்தப் படகில் பாய்மரம் தீ பற்றி எரிந்தது. பிறகு மற்றப் பகுதிகள் எரிந்தன.


டாக்டர் ஜேக்சன்! அபாரமான தாக்குதல்!


படகில் இருந்து குதித்த மீனவர்களை காப்பாற்றக் கூடாதா?
மிஸ்டர் ஜேம்ஸ்! அதற்கு நேரம் ஏது? அடுத்த தாக்குதலுக்கு தயார் ஆக வேண்டாமா?


உங்க அடுத்த தாக்குதல், அமெரிக்க உதவி ஜனாதிபதி பயணம் செய்யும் ஜெட் விமானம் தானே!
ஆமா!


ஜேம்ஸ்! உதவி ஜனாதிபதி அவரது விமானத்தில் வரவில்லை. நியூயார்க்கில் இருந்து போக்குவரத்து விமானத்தில் வருகிறார்.


அந்த விமானத்தை உங்கள் கதிர் வெடி தாக்கா விட்டால்?
நிச்சயம் தாக்கும். அந்த விமானத்தில் ஏற்கனவே வெடி மருந்து பார்சல் ஒன்றையும் ஏற்றி உள்ளோம்!


அதாவது ஏற்கனவே ஒரு வெடிகுண்டை விமானத்தில் வைத்து உள்ளீர்கள். இல்லையா?
ஆமா. ஆனால் அதை யாராலும் கண்டுபிடிக்க முடியாது!


அதாவது சுவரை சுத்தப் படுத்தும் ஒரு ரசாயன பொருள் ஏற்றப்பட்டு உள்ளது.
அது உலோகத்தை "வெல்ட்" பண்ணவும் பயன்படும்.


அதனால் "கதிர் வெடி" இங்கிருந்து செலுத்தப்பட்டதும், அதன் உஷ்ணத்தில் அந்த ரசாயன பொடி தீ பற்றிக்கொண்டு 5000 டிகிரி பாரன்கீட் சூட்டில் எரியும்!


டாக்டர் ஜேக்சன்! உதவி ஜனாதிபதி விமானம் எப்போது வரும்!
இன்னும் அரை மணி நேரத்தில் நம் மீது பறந்து செல்லும்!


சரி! இடைப்பட்ட நேரத்தில் ஜேம்ஸ்பாண்டை விசாரிப்போம்!


உமர்! பாத்திமா தொங்கிக் கொண்டுதானே இருக்கிறாள்?
சார்! அந்த ஆள் ஓடுகிறார்!


அவனைப் பிடி! விடாதே!




கைகள் கட்டப்பட்ட நிலையில் ஜேம்ஸ் கடலில் குதித்தார்!


விடாதே! சுடு! சுட்டுக் கொல்லு!


சரமாரியான குண்டுகளில் இருந்து ஜேம்ஸ் தப்பினார்.


தம் பிடித்துக்கொண்டு கடலுக்குள் நீந்தினார்.


கப்பலில், டாக்டர் நோ உடைத்த பாட்டில் துண்டை ஜேம்ஸ் எடுத்து வைத்து இருந்தார். அதால் கை கட்டை அறுத்தார்.


சீக்கிரமா கை கட்டை அவிழ்க்க வேண்டும்.
எவ்வளவு பெரிய ஆபத்தில் மாட்டிக் கொண்டேன்!


படகை கீழே போட்டு, அதில் போய் ஜேம்ஸை பிடிக்கவா?
வேண்டாம்! கடலில் கொஞ்சம் இறைச்சி துண்டுகளை வீசு! பிறகு சுறுக்கள் அவனை பார்த்துக்கொள்ளும்!


இங்கிலாந்து நீர்மூழ்கி கப்பலில்...
அங்கே கப்பலை விடு!
ஜேம்ஸ் நீந்துவது சோனர் திரையில் தெரிகிறது!
இதோ! உடனே போகிறேன்!


நீர்மூழ்கி கப்பல் ஜேம்ஸ் அருகே போனது.
இதோ ஜேம்ஸ்! சாகும் தருவாயில் இருக்கார்!


ஜேம்ஸ்! உங்க பூட்சில் உள்ள பீப்...பீப் கருவி மூலம் சோனர் திரையில் உங்களை கண்டு பிடித்தோம்.
சுருக்களில் இருந்து தப்பித்ததே ஆச்சரியம்!


கப்பல் கேப்டனிடம், ''கதிர் வெடி'' கப்பலை தாக்கும்படி 007 கூறினர்.
லண்டனில் ராணுவ தளபதியிடம் இருந்து உத்தரவு வந்தால்தான் அந்த கப்பலை தாக்க முடியும், ஜேம்ஸ்!


அமெரிக்க உதவி ஜனதிபதி வரும் விமானத்தை தாக்க"கதிர் வெடி" கப்பலில் பரபரப்பாக வேலை நடக்கிறது.
சார்! அமெரிக்க விமானம் ராடார் கருவியில் தெரிகிறது!
தாக்குதல் துல்லியமாக இருக்க வேண்டும்!


விமானம் பறக்கும் உயரம், போகும் வழி, வேகம் இவற்றை கம்பியூட்டர் கணித்து, சரியாக தாக்கும்!


ஜேம்ஸ், நீர்மூழ்கி கப்பல் கேப்டனிடம்...
கேப்டன்! நிலைமையை புரிந்து கொள்ளுங்க! அமெரிக்க உதவி ஜனதிபதி வரும் விமானத்தை அந்தக் கப்பல் தாக்க இருக்கு!
அதற்காக? மேல்அதிகாரி உத்தரவு இல்லாமல் எப்படி ஒரு கப்பலை தாக்கி மூழ்கடிக்க முடியும்?


சரி வேண்டாம்! குறைந்தபட்சம் அந்த கப்பலே நிறுத்துங்க. அதில் சூரிய ஒளியை பிரதிபலிக்கும் ராட்சத கண்ணுடி ஏன் வைக்கப்பட்டு உள்ளது என்று கேளுங்க!
கேப்டன்! உளவுத்துறை தலேவர் "எம்" பொறுப்பு ஏற்பார்!


அப்படியானல் அந்த கப்பலே தடுக்கிறேன்.
நான் மேலே போய் "மினி" ஹெலிகாப்டரை தயார் செய்கிறேன்.


சிர்கான் கப்பலில்...
சார்! ரேடியோ கருவியில் கிடைத்த செய்தி இது!


என்ன சார்?
நம்மை ஒரு இங்கிலாந்து கப்பல் நிற்கச் சொல்கிறது. பாஸ்சிடம் கேட்கிறேன்!


பாஸ்! நாம் என்ன செய்ய வேண்டும்?
ரேடியோ கருவியில் ஏதாவது பேசி நேரம் கடத்து. அதற்குள் விமானம் வந்துவிடும்!


சிர்கான் கப்பலில் இருந்து செய்தி—
எங்கள் கப்பலை நிறுத்த உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?
நாட்டோ ஒப்பந்த நாடான இங்கிலாந்து கப்பல் இது. நாட்டோ ஒப்பந்த நாட்டு தலைவர் ஒருவரை பாதுகாக்கும் பொறுப்பு எங்களிடம் கொடுக்கப்பட்டு உள்ளது.


அவர் வரும் விமானத்தை சிலர் தாக்கப் போவதாக தகவல். எனவே உங்க கப்பலில் உள்ள ராட்சத கண்ணாடிக்கு என்ன அர்த்தம் என்று சொல்!
அது மட்டும் அல்ல. பாத்திமா காலித் என்ற பெண்ணை பிடித்து அந்தக் கப்பலில் அடைத்து வைத்து இருப்பதாயும் எங்களுக்கு தகவல்!


அவள் அந்த கப்பலில் உயிரோடு இருக்கிறளா என்பதை முதலில் நாங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்!
இதுபற்றி எங்கள் தலைவரிடம் கேட்டு பதில் சொல்கிறோம்!


இதற்கு இடையில் அமெரிக்க உதவி ஜனாதிபதி இருந்த விமானம் வந்துகொண்டு இருந்தது!
பாஸ்! அந்த விமானம், நாம் தாக்கும் தூரத்தில் பறக்கிறது!


இன்னும் 5 நிமிடத்தில் "கதிர் வெடி" தாக்குதல் நடக்கும் என்று கம்பி—யூட்டர் காட்டுகிறது.
தலைவருக்கு அவசர செய்தி!


சிர்காள் கப்பல் காப்டன், டாக்டர் நோவிடம்—
நம் கப்பல் மேல் உள்ள பிரதிபலிப்பு கண்ணுடி பற்றி இங்கிலாந்து கடற்படை கப்பல் கேட்கிறது. பாத்திமாவையும் காட்ட வேண்டுமாம்!


டாக்டர், நமது கதிர் வெடி நீர்மூழ்கி கப்பலை தாக்குமா?
அந்த கப்பலின் அடிப் பாகத்தை உருக்கி ஓட்டை போடும் அளவுக்கு சக்தி வாய்ந்தது!


அருகே போய் கதிர் வெடியை பாய்ச்சினுல், அவர்கள் அணு சக்தி உலையைக் கூட எரித்து விடும்!


வெரிகுட் டாக்டர்! வெரிகுட்! கேப்டன்! பாத்திமாவை கப்பல் மேல் நிறுத்து. பிறகு நீர்மூழ்கி கப்பலை அருகில் அழை!
இங்கிலாந்து கடற்படை கப்பல் கேப்டனுக்கு செய்தி. எங்கள் கப்பலில் உள்ள பிரதிபலிக்கும் கண்ணுடி, சூரிய ஒளியை மின்சாரம் ஆக்கி, கப்பல் ஜெனரேட்டர்களுக்கு கொடுக்கும் சாதனம்.


நீர்மூழ்கி கப்பலை அருகில் கொண்டு வந்து பாத்திமாவை பாருங்கள்! பேசுங்கள்!
கேப்டன்! அதற்கு முன் நான் மினி ஹெலிகாப்டரில் பறக்கிறேன்.


சில நிமிடங்களில் 007 பறந்தார்.


அமெரிக்க உதவி ஜனாதிபதி, பயணம் செய்த அந்த விமானத்தில்—
சார்! விமான கேப்டன் அவரது கேபினுக்கு உங்களை அழைக்கிறார்!


என்ன கேப்டன்?
சார்! இங்கிலாந்து உளவுத்துறையினர் ஒரு அவசர ரேடியோ செய்தியை அனுப்பி உள்ளனர்!


ஒரு கப்பலில் இருந்து, ஒருவகை உஷ்ண கதிர், நமது விமானத்தை தாக்கி அழிக்க இருப்பதாக அவர்கள் எச்சரிக்கை செய்கிறார்கள்!


இந்த விஷயத்தை அமெரிக்க உளவுத்துறை உறுதி செய்கிறதா கேப்டன்?
அமெரிக்க உளவுத்துறை அதை உறுதி செய்யவில்லை.


என்றாலும், உதவி ஜனாதிபதி அவர்களே! இந்த விமானத்தின் கேப்டன் என்ற முறையில், பயணிகள் அனைவரின் பாதுகாப்புக்கு நான் பொறுப்பு!
எனவே விமானத்தை, பாதுகாப்பாக வந்த வழியே திருப்பப் போகிறேன்!


நோ! நோ! அப்படி செய்தால், எப்லிஸ் பயங்கரவாதிகளுக்கு வெற்றி என்று ஆகிவிடும்!


விமானத்தில்...
இதென்ன பீப்...பீப் ஒலி!
பீப்...பீப்
எப்லிஸ் பயங்கரவாதிகள் பயமுறுத்தல் காரணமாக வைக்கப்பட்டு இருக்கும், எச்சரிக்கை கருவி!


பெட்ரோல் டேங்க் உள்ள பகுதியிலும் சரக்கு உள்ள பகுதியிலும் அளவுக்கு அதிகமாக உஷ்ணம் ஏறி வருவதை எச்சரிக்கிறது.
இங்கிலாந்து உளவுததுறை கொடுத்த செய்தியை அது உறுதி படுத்துவதாய் உள்ளது.


உஷ்ண கதிர் தாக்குதல் என்பது எல்லாம் சுத்த பேத்தல்!
கேப்டன்! அவசர கால தீ அணைப்பு கருவி விமானத்தில் உள்ளதே!
சாரி! ஜனாதிபதி அவர்களே! நான் விமானத்தை திருப்புகிறேன்.


சிர்கான் கப்பலில்...
ராடார் சமிஞ்கை செய்கிறது.
அந்த விமானம் திசை மாறி திரும்பி செல்கிறது!


நமது தாக்குதல் பற்றி யாரோ அந்த விமானத்தை எச்சரித்து இருக்க வேண்டும்!
அது, ஜேம்ஸ் பாண்டாகத்தான் இருக்கும்.


சரி! அதை குறி பார்த்து சூரிய ஒளி பிரதிபலிப்பு பூதக் கண்ணாடியை திருப்பு!
பாஸ்! அந்த இங்கிலாந்து நீர்மூழ்கி கப்பல் நம்மை நோக்கி வருகிறது.


ஏய்! பாத்திமா என்ன ஆனாள்?
பாஸ்! நீங்க சொன்னபடி அவளை கப்பலின் மேல் தளத்துக்கு அழைத்துப் போய் இங்கிலாந்து நீர்மூழ்கி கப்பலுக்கு காட்டுகிறோம்!


வெரிகுட்! விமானம் தப்பித்தாலும் நீர்மூழ்கி கப்பலை தாக்க வேண்டும். தயார் ஆகு!


ஐயோ! இதென்ன?


அப்போது ஜேம்ஸ் மினி ஹெலிகாப்டரில் அங்கே பறந்து வந்தார்.
ஜேம்ஸ்!


காவலாளிகள் இருவரையும் ஜேம்ஸ் ஒரே விநாடியில் சுட்டு வீழ்த்தினார்.



007, பாத்திமாவுடன் நீர்மூழ்கி கப்பலுக்கு பறக்க...

அவனை சுடுங்க! உம்...!

டாக்டர் ஜேக்சன்! அந்த நீர்மூழ்கி கப்பல் மீது கதிர் வெடியை பாய்ச்சும்!

அதை சுட்டு எரி!

ஜேம்ஸ்! உங்க மீது குண்டு பாய்ந்து விட்டதா?

கையில் ஒரு குண்டு பாய்ந்து இருக்கு!


ஜேம்ஸ் பாத்திமாவுடன் பறந்தபடியே சிர்கான் கப்பலின் அடிவாரத்தை ஒரு விசேட துப்பாக்கியால் துளைத்து, எண்ணெயில் தீ மூட்டினார்.


இந்த தடவை டாக்டர் நோ தப்ப முடியாது. கப்பலோடு அவர் எரிந்து சாம்பல் ஆகவேண்டியதே!


சிர்கான் எண்ணெக் கப்பல் பயங்கரமாக எரிந்தது. ஜேம்ஸ் நீர்மூழ்கிகப்பலுக்கு திரும்பினார்.


ஜேம்ஸ்! சீக்கிரம் வாங்க! நீர்மூழ்கி கப்பலை இங்கிருந்து நகர்த்தணும்!
டாக்டர் நோ கப்பல் எரிவது கண்கொள்ளா காட்சியாக தெரிகிறது!


சிர்கான் கப்பலில் ஒருவர் கூட தப்பவில்லே.
அது கவலே தரும் செய்தி. என்றுலும் நாம் அதில் ஒன்றும் செய்வதற்கு இல்லே.


ஜேம்ஸ்! அந்த கப்பலே அழித்ததற்கு நீங்க விளக்கம் சொல்ல வேண்டி வரும்!


கவலேயை விடுங்க! நான் என்னுடன் ஒரு டெலி-காமராவையும் எடுத்துச் சென்றேன்.
கதிர் வெடி தாக்குதலுக்கு அவர்கள் தயார் ஆனதை படம் எடுத்து உள்ளேன். அது மட்டும் அல்ல! பல இந்திய விமானங்களே வீழ்த்திய அந்த இரும்பு கை உளவாளி டாக்டர் நோவையும் படம் எடுத்து இருக்கேன்!


உதவி ஜனதிபதி இருந்த விமானத்தில்...
இங்கிலாந்து கடற்படை செய்தி அனுப்பி இருக்கிறது. அபாயம் நீங்கிவிட்டது.


அதனல் நாம் மொராக்கோ நோக்கி புறப்படுகிறேம். கிட்டதட்ட சரியான நேரத்துக்கு போய் விடுவோம்!
கேப்டன்! நன்றி! தாமதம் ஆனல் வேறு ஏதாவது காரணம் சொல்லிவிடுங்க!










ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ்.ராமஜெயம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம், ராணி அச்சகம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007. 




## 8. ஆவியுடன் பேச்சு!

மனேஜ், தன் பெட்டியில் இருந்து ஒரு சென்ட் பாட்டிலை எடுத்து, அதை திறந்து சுவர் அருகே வைத்தான். அதன் ரம்மிய மான மணம் மெல்ல வியாபித்தது.

தேங்காயை உடைத்தான். தேங்காய் நீரில் மஞ்சளைக் கரைத்து, கலயில் முகம் மாதிரி ஒரு உருவம் செய்தான். அதற்கு திருநீறு பட்டையிட்டான். குங்குமப் பொட்டு இட்டான்.

பிறகு தேங்காய், வாழைப்பழம், எலுமிச்சம்பழம் இவற்றால் படப்பு போட்டான். பத்தி கட்டை பிரித்து வாழைபழத்தில் நட்டு கொளுத்தினன். எலுமிச்சம்பழத்தில் துவாரம் செய்து அருகம்புல்லை நட்டு வைத்தான்.

பிறகு எருக்கம் இலையை தரையில் பரப்பினன். அதன் மீது ஒரு தாம்பாளத்தை வைத்தான். தாம்பாளத்தில் தேங்காய் நீர் கலந்த தண்ணீரை விட்டான். ஒரு எலுமிச்சம்பழத்தை பிழிந்து ஊற்றினன். கொஞ்சம் மஞ்சள், குங்குமத்தை அதில் கரைத் தான். ஊமத்தம் பூவை பிய்த்து போட்டு அதில் மிதக்க விட் டான்.

ஒரு கட்டி கற்பூரத்தை எடுத்து படப்பு இலையில் கொளுத்தி ஞன்.

பெட்டியில் இருந்த ஒரு டாலர் செயினை மனேஜ் அணிந்து கொண்டான். அந்த டாலர் ஒரு சிறிய டப்பா மாதிரி இருந்தது. அதனுள் என்ன இருக்கிறது என்று மனேஜுக்கு தெரியாது. ஒரு மலையாள மந்திரவாதி மந்திரித்து கொடுத்தது, அது.

கற்பூரம் எரிந்துகொண்டு இருக்கும்போது மனேஜ் தியானத்தில் ஆழ்ந்தான்.

சக்திவாய்ந்த அவனது கண்கள் இமைக்குள் அடைபட்டு, எதையோ சூன்யத்தில் தேடின.

வலிமை மிக்க அவனது மனோசக்தி, ஒரு புள்ளியில் ஒருமித்து, பூமியின் சகல கட்டு திட்டங்களையும் கடந்து ஒரு கருவெளியில் துல்லியமாகப் பாய்ந்தது.

"சின்ன எஜமானின் ஆவியைத் தேடுகிறோம்!" என்ற ஒரே நினைப்பைத் தவிர அவனிடம் வேறு நினைப்போ, சலனமோ இல்லை.

கற்பூரம் அணையும் தருவாயில் மனோஜுக்கு மூச்சு முட்டியது. அவன் இதயம் படக் படக் என்று அடித்து நெஞ்சம் விம்மி விம்மி இறங்கியது.

அவன் கண்களை திறக்காமலேயே இன்னொரு கற்பூர கட்டியை எடுத்து எருக்கம் இலை துண்டு ஒன்றில் வைத்து கொளுத்தி அதை தாம்பாளத் தண்ணீரில் மிதக்க விட்டான்.

பிறகு செயின் டாலரை இடது கையால் பிடித்துக்கொண்டு, வலது கையால் ஊமத்தம் பூவை பிய்த்து பிய்த்து தண்ணீரில் போட்டான்.

மனோஜ் முகம் கருத்தது. நெற்றியில் சுருக்கங்கள் படர்ந்தன. அவன் மீண்டும் மூச்சு விட சிரமப்பட்டான்.

தாம்பாள தண்ணீரில் மிதந்த கற்பூரம் அப்படியே தானாக சுற்ற ஆரம்பித்தது!

வெற்றி! சின்ன எஜமான் ஆவி அங்கே அவன் அருகே வந்துவிட்டது!

மனோஜ் அதனுடன் பேசினான்—

"ஐயா! எப்படி இருக்கிறீர்கள்?"

"நன்றாக இருக்கிறேன். என்னை ஏன் தொல்லைபடுத்துகிறாய்?"

"இனி அப்படி செய்ய மாட்டேன். உங்களால் நான் உயிர் பிழைக்க வேண்டும். நான் மிகவும் குழப்பம் அடைந்து இருக்கிறேன். எனக்கு நீங்க உதவ வேண்டும்."

"நான் துயருற்று இருக்கேன். என்னை தொல்லைப்படுத்தாதே!"

"தொல்லை என்று நினைக்காதீர்கள். எனக்கு உங்கள் உதவி கட்டாயம் வேண்டும். உங்களை கொலை செய்தது யார்?"

"பாண்டியனின் ஆவி!"

"நினைத்தேன். அது அப்பப்போ ஆட்கொள்ளும் உடல் எது?"

"எல்லாம் உன் அருகில் உள்ள ஒரு ஆள்தான். போதும்! என்னை விட்டுவிடு. என் நிம்மதியைக் கெடுக்காதே!"

மனோஜ் கண்களைத் திறந்தான்.

—தாம்பாள கற்பூரம் சுற்றுவது நின்றிருந்தது.

—பத்திகள் அணைந்துவிட்டன.

—செண்ட் பாட்டில் காலியாகி இருந்தது.

மனோஜுக்கு உடம்பெல்லாம் வியர்த்து இருந்தது. துவாலையால் துடைத்தான்.

நெடும் தூரம் ஓடியது போல் களைத்தது. தண்ணீர் அருந்தினான்.

பாண்டியன் ஆவி!

பாண்டியன் ஆவி!

—அது இங்குள்ள ஒருவன் மீது குடி கொள்கிறதாமே யார் அது?

டாலர் செயினை கழற்றிவிட்டு மனோஜ் கட்டிலில் சாய்ந்தான்.

பாண்டியன் ஆவி, அவ்வப்போது தொத்திக்கொள்ளும் நபர் யார்? ஒற்றைக்கட்டையாக இருந்தும் அந்த பங்களாவில் தங்க மறுக்கும் சமையல் முனியாண்டியா?

கொலையை நேரில் பார்த்த டிரைவர் மணியா?

இரவு காவல் வேலையில் ஈடுபடும் வஜ்ரவேலுவா?

அப்பாவிகள் மாதிரி தோன்றும் கணக்குப்பிள்ளை சதாசிவமா? அல்லது மேஸ்திரி பெரியசாமியா?

யார் அது?—அதே சிந்தனையில் மனோஜ் தூங்கிப்போனான்.

மறுநாள் விழித்து எழுந்தபோதும் அந்தக் கேள்வியே வளைய வந்தது.

எஸ்டேட் ஊழியர்கள் அனைவரையும் அவன் சந்தேகக் கண்ணோடு பார்த்தான்—யார் அது?

மூன்றாவது நாள் கண்டத்தில் இருந்து தப்பித்ததோடு, மனோஜ் அதற்கும் ஒரு படி மேலே போய், துயர் துடைக்கும் துப்பறியும் பணியிலும் இறங்கிவிட்டான்.

இந்த வெற்றிகளையும், இதுவரை அவன் செய்து வந்திருந்த காரியங்களையும் முதலாளி விசுவநாதனிடம் தெரியப்படுத்த அவன் "டிரங்கால்" போட்டான்.

"லைன்" சரி இல்லை என்று கொஞ்ச நேரம் கழித்துதான் இணைப்பு கிடைத்தது. முதலாளி விசுவநாதன்தான் பேசினார். ஆனால் பேச்சு சரியாக கேட்கவில்லை. அதற்குள் தொடர்பும் அறுந்துவிட்டது.

மனோஜ் மீண்டும் இணைப்புக்கு முயற்சி செய்தான். வெகு நேரம் கழித்துதான், இணைப்பு கிடைத்தது. இப்போது முதலாளி பேசவில்லை. அவரின் ஒரே மகள் திலகா பேசினாள்!

"மிஸ்டர் மனோஜ்! போனுக்காக அப்பா இவ்வளவு நேரமும் காத்து இருந்தார். 10 மணிக்கு "போர்டு மீட்டிங்" இருக்கு அப்படின்னு அவசரமா போய்விட்டார். "எஸ்டேட்டில் இருந்து மனோஜ் பேசுவார். விஷயம் என்ன என்று கேட்டு வை. இரவில் நான் பேசிக்கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு சென்றார்.

—மனோஜ் கண்களை மூடிக்கொண்டு மறுமுனையில் திலகா பேசும் இனிய குரல் காதில் தேன் மழையாக நிறைவதை ரசித் தான்.

அவள் மீண்டும் "ஹலோ! ஹலோ!" என்ற பிறகுதான் அவன் சுயநினைவுக்கு திரும்பினான்.

"விஷயத்தைச் சொல்லுங்க. அப்பா வந்ததும் சொல்லிவிடு கிறேன்!"

உடனே மனோஜ் கடந்த மூன்று நாட்களில் எஸ்டேட்டில் நடந்த வேலைகளைச் சுருக்கமாகச் சொன்னான்.

உடனே அவள், "ஏன் சார், நீங்க அந்தப் பங்களாவில்தான் தங்கி இருக்கீங்களா?" என்று கேட்டாள்.

"ஆமாம்! அதனால் என்ன?

"அப்பா ரொம்பவும் வருத்தப்பட்டுக்கொண்டு இருந் தார்கள். காலையில் நீங்க டிரங்கால் போட்ட பிறகுதான் நிம்மதி ஏற்பட்டது. நேற்று மூன்றாவது இரவு ஆச்சே!"

"உங்க அப்பா அனுப்பி வைத்த சினிமா கம்பெனி ஆட்கள் நேற்று வந்து சேர்ந்தாங்க. ரொம்ப நன்றி."

"ஏன் சார்! நேற்று இரவு ஒன்றும் அபாயம் இல்லையே!"

"நேற்று இரவு ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்து இருந் தேன். எல்லோரும் படுக்கவே ஒரு மணி ஆகிவிட்டது."

"அப்பா, உங்கள் துணிச்சலைப் பற்றியே பேசிக்கொண்டு இருந்தார்கள். அங்கே உங்க மூணு நாள் அனுபவம் என்ன? அதைச் சொல்லுங்க!"

"அனுபவம் என்றால், எதைக் கேட்கிறீர்கள்?"

"அதுதான் சார், எல்லோரையும் பயமுறுத்திக் கொண்டி ருக்கும் அந்த் ஆவி—பேய்...அதுபற்றி...!"

"அந்தப் பேய் என்பது கொலை செய்யப்பட்டானே, பாண்டி, அவனது ஆவி!"

"ஐய்யோ! அதை எப்படி கண்டுபிடித்தீர்கள்?"

"எனக்கு இறந்தவர்களுடன் பேசும் உத்தியும், பயிற்சியும் உண்டு. அதைப் பயன்படுத்தி, உங்க சித்தப்பா சபாபதி அவர் களின் ஆவியை வரவழைத்து பேசினேன்!"

"சார்! நீங்க சொல்றது எவ்வளவு ஆச்சரியமா இருக்கு தெரியுமா? என்னால் நம்பக் கூட முடியல!"

"உங்க சித்தப்பா ஆவிதான் கூறியது, பாண்டியனின் ஆவிதான் எல்லாவற்றிற்கும் காரணம் என்று!"

"அப்படியானால் இனியும் ஆபத்து இருக்கிறது என்று தானே அர்த்தம்?"

"ஆமாம்!"

"சார்! எனக்கு ஒரே பயமாகத்தான் இருக்கு. ஆனா அப்பா எஸ்டேட்டுக்கு போக வேண்டும் என்றுதான் கூறிக்

கொண்டு இருக்காங்க!''

''இன்னும் கொஞ்ச நாள் போகட்டும். நான் வரச்சொல்லும்போது வந்தால் போதும். அப்பாகிட்ட சொல்லிவிடுங்க.''

''சரி சார்! நீங்க ஜாக்கிரதையா இருங்க.''

—போன் பேசி முடிந்ததும், மனோஜ் மனம் துள்ளியது. திலகா! திலகா! என்று அவன் மனம் குதித்தது!

சினிமா படப்பிடிப்பாளர்களை அழைத்துக்கொண்டு எஸ்டேட்டில் சில அழகான இடங்களை அவர்களுக்கு மனோஜ் காட்டினான். அவர்கள் மிகவும் திருப்தி அடைந்தார்கள். உடனே சென்னை திரும்புவதாக கூறி புறப்பட்டார்கள். அவர்களை வழி அனுப்பி வைத்துவிட்டு, மனோஜ் ஜீப்பில் கொலைப் பாறையை நோக்கி சென்றான், அங்கே பாதை அமைக்கப்பட்டு இருந்ததை பார்த்துவர.

டிரைவர் மணியை, மனோஜ் ஓரக் கண்ணால் கண்காணித்தான். அவனிடம் ஏதாவது அசாதாரணம் தெரிகிறதா என்று பார்த்தான்.

மணி, தேவை இல்லாமல் பயந்து பயந்து ஜீப்பை ஓட்டுவதாக மனோஜுக்கு பட்டது.

கொலைப் பாறை வந்துவிட்டது!

கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு வில்வம் மரத்தின் கீழ் ஜீப் செல்லும்போது, மனோஜிக்கும், மணிக்கும் பின்னால் ஜீப்பின் பின்புறம் ஒரு பனம்பழம் விழுந்தபோது ''பொத்''தென்று சத்தம் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். ஒன்றும் தெரியவில்லை. பின்னர் சத்தம் எப்படி வந்தது? இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தனர்!

ஜீப் தேவை இல்லாமல் குலுங்குவதாக இருவரும் உணர்ந்தனர்.

மனோஜ் கீழே குதித்து பார்த்தான். ஒன்றும் தெரியவில்லை.
மணியும் கீழே இறங்கிப் பார்த்தான்.
பின் சக்கரம் ஒன்றில் காற்று இறங்கி இருந்தது.

அவன் பயத்தில் வியர்த்து, நனைந்தான்.

''மணி! ஸ்டெப்னியை எடுத்து மாட்டு. நான் அந்த வில்வ மரத்தின் நிழலில் உட்கார்ந்து இருக்கேன்!''

மனோஜ் கைக்கெடிகாரத்தைப் பார்த்தான்.

மணி பகல் 12.

''திடீர்'' என்று இப்படி காற்று இறங்க காரணம் இல்லையே என்ற நினைப்பு மணியின் மனதில் பெரிய பரபரப்பையும், பயத்தையும் உண்டாக்கியது.

அவன் அந்த கொலைப் பாறையை வெறித்து பார்த்தான்.

வில்வ மரத்தின் கிளைகளில் வவ்வால்கள் சிறகடிப்பதைப் போல் சத்தம் கேட்டது. அவைகள் கிளைக்கு கிளை தாவுவது போல் கிச்சு கிச்சு குரல் கேட்டது. மனோஜ் மேலே பார்க்கவே இல்லை.

மனோஜ் அப்படியே அமர்ந்தபடி டிரைவர் மணியை உற்று நோக்கினான்.

திடீர் என்று—

பொத் என்று சத்தம்!

மனோஜ் பின்னால் ஏதோ தக்கையாக விழுந்தது போல் கேட்டது!

மனோஜ் அப்போதும் பின்னால் திரும்பி பார்க்கவில்லை.

ஆனால் எழுந்துகொண்டு, கொலைப் பாறைக்கு அந்தப்புறம் இருந்த குளத்தையும், அங்கிருந்து வெளியே செல்லும் பாதையையும் பார்த்தான்.

பிறகு ஜீப் அருகே வந்தான்.

அதற்குள் மணி பின் சக்கரத்தை மாட்டி இருந்தான்.

"மணி! ஜீப்பை பங்களாவுக்கு விடு!"

ஜீப் திரும்பி புறப்பட்டது.

மனோஜ் அமைதியாக சிந்தித்தான்.

சின்ன எஜமான் ஆவி சொன்னதே! "உன்னுடன் இருக்கும் ஒருவன் உடலில்தான் பாண்டியன் ஆவி பரவிக் கொள்கிறது!" என்று.

யார் அது?

இந்த மணிதானே!

—அப்படி நினைக்க மனோஜுக்கு போதிய ஆதாரம் இருப்பதாக தென்பட்டது.

மனோஜ் முதலில் வேலைக்கு வந்தபோது, "இங்கே பேய் இருப்பது தெரிந்துமா வேலைக்கு வந்தீர்கள்?" என்று கேட்டானே!

பாண்டி கொலை நடந்தபோது உடன் இருந்தவனும் இவன் தானே!

"சந்தேகமே இல்லை. முதலில் கண்காணிக்க வேண்டிய ஆள், இந்த மணிதான்!"—மனோஜ் தீர்மானித்துக்கொண்டான்.

ஜீப் போய்க்கொண்டு இருந்தது.

அவர்களை, ஒரு செடி மறைவில் இருந்து வாட்ச்மேன் மகள் முத்தம்மா கவனித்துக்கொண்டே இருந்தாள்.

அவள் கண்கள் கலங்கிப் போய் இருந்தது! சிவந்து போய் இருந்தது!

(இந்தக் கதையின் தொடர்ச்சி அடுத்த இதழில் வெளிவரும்.)

உங்கள் கருத்து

## கவச உடை!

ஜேம்ஸ்பாண்ட் துப்பறியும் “கவச உடை”, மடை திறந்த வெள்ளம் போல் விறுவிறு என்று ஓடியது!

—ஏ. சசிகலா, கன்னத்திமுக்கு, திருவனந்தபுரம்.

—ஏ. வேல்ராஜா, விளாத்திகுளம்.

கவச உடையை அணிந்துகொண்டு ஜேம்ஸ்பாண்ட் நிகழ்த்திய வீரச் செயல் என்னை மெய்சிலிர்க்க வைத்தது.

—ஏ. ரிச்சர்ட் டொமினிக், சேர்வைக்காரன் மடம்.

—அ. முகமது சித்சித், திருப்பாலைக்குடி.

—ஏ. பாஸ்கர், மதுரை–1.

—வ. ரவி, மொரப்பூர், அரூர் தாலுகா.

—தி. ராஜேஷ், மேற்கு அண்ணா நகர், சென்னை–101.

தன் வினை தன்னைச் சுடும் என்பது போல், மிர்சாவின் கார் கண்ணாடியே அவனை காட்டிக் கொடுத்துவிட்டது!

—பி. குமரேஸ்வரன், ஜோதி நகர், சென்னை–19.

—பி. தனலட்சுமி சங்கர், சென்னை–19.

ஜேம்ஸ்பாண்டின் கிடுக்குப் பிடியில் இருந்து யாரும் தப்ப முடியாது என்பதற்கு கவச உடை ஓர் எடுத்துக்காட்டு!

—சி. ஈஸ்வரமூர்த்தி, கே. பரமத்தி.

—ஆர். சண்முகம், ஈரோடு-5.

—ஆர். கணேசன், பல்லடம்.

## எஸ்டேட் பேய்!

“எஸ்டேட் பேய்” தொடர்கதையில் சின்ன முதலாளி சபாபதி—முத்தம்மாள் நட்பை பற்றிய இடம், பாண்டி கொலை [illegible] சபாபதி தன் அறையில் மாண்டு கிடக்கும் மர்மம் ஆகிய மூன்று சம்பவங்களும் மூக்கின் மேல் விரலை வைக்கச் செய்துவிட்டன!

—பெ. [illegible]ரங்கராசன், அருப்புக்கோட்டை.

—வி. விஜயா, பாண்டிச்சேரி.

[illegible] பேய் தொடர்கதையில் வேகம் வரவர அதிகரித்துக்கொண்டே போவதற்கு அத்தியாயம் 6 சாட்சி!

—சி. கணேசன், இடக்காடுமட்டம்.

—என். ஜி. தஸ்தகீர் சாகிப், நாகூர்.

மூன்றாவது நாள் இரவில் மனோஜுக்கு என்ன நடக்குமோ என்ற கை நடுக்கத்துடன் 6-வது அத்தியாயத்தை படித்து முடித்தேன்!

—டி. விஜயராஜ், ஆர். என். பட்டி, சாத்தூர் வட்டம்.

—பி. கோபாலன், வெள்ளோட்டாம்பரப்பு.

—நீலாம்பிகை, செக்காணூரணி, தேனி.

—ஜி. வேடியப்பன், திருப்போரூர்.

# ரூ. 50- பரிசு: கருத்துப் போட்டி-21

"கதிர் வெடி" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன? என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து, 1-10-85 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி 10-9-85. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில், ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.




கருத்துப் போட்டி எண்: 21

பெயர்: [redacted]

முகவரி: [redacted]

.....................................................

முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்,
நெடுஞ்சாலை,
சென்னை-600 007.

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்: [redacted]

.....................................................

(கையொப்பம்)

## கருத்துப் போட்டி எண்.19 முடிவு

"கவச உடை!" சித்திரக்கதை கருத்துப் போட்டியில் கலந்துகொண்டவர்களில், டி. லோகநாதன் (விழுப்புரம்), எஸ். என். பி. அருணசலம், ஜே. அம்சகுமாரி பி. காம். (அரச்சலூர்), ஜி. தேவா (பெரியாங்குப்பம்), கே. புவனேசுவரி (சென்னை–34), இரா. இராமசாமி, (நூர்சாகிபுரம்), எஸ். டி. கார்த்திகேயன் (சிறுவள்ளூர்), என். செந்தில்குமார் (மொடக்குறிச்சி), டி. கமலாதேவி (வேலூர்–9), எஸ். எஸ். சசிரேகா (சென்னை–28) ஆகியோர் பாராட்ட தகுந்த விதத்தில் கருத்துக்களை எழுதி இருந்தனர்.

ஆனல் மிகச் சிறந்த கருத்தை எழுதியவர் என்று தேர்ந்து எடுக்கப்பட்டு, அதற்காக ரூ. 50 பரிசு பெறுபவர்:—

ஆர். சிவக்குமார் பி. காம்.,
D 2/14 டவுன்ஷிப்,
பி. எச். இ. எல்.,
திருச்சிராப்பள்ளி–620 014.

அவரது மனதைக் கவர்ந்த சம்பவமும், அதற்கான காரணமும் வருமாறு:—

"ராணி காமிக்ஸ் 27–வது இதழில் வெளியான "கவச உடை" சித்திர நாவலில், ஜேம்ஸ் பாண்ட், வில்லனக காசிம் வீட்டில் ஜேக் டோனர், ஜென்னி ஆகியோருடன் மாட்டிக்கொள்கிருர். வீடு தீ வைக்கப்படுகிறது. கீழே குதித்தால் சுட்டுக் கொல்லப் படும் நிலமை.

இப்படிப்பட்ட ஒரு இக்கட்டான நிலையில், ஜென்னி, ஜேக் டோனர் இருவரையும் கட்டிப்போட்ட கயிற்றை, ஜேக் டோனரின் கயிறு வீசும் திறமையை ஜேம்ஸ் பாண்ட் பயன் படுத்தி, வெளியில் உள்ள இரும்பு பிறை வடிவ கம்பியில் கயிற்றை மாட்டச் செய்து, பிறகு "கவச உடை"யை அணிந்து கயிற்றில் இறங்கி ஜேம்ஸ் பாண்ட் எதிரிகளை வீழ்த்துகிருர்.

இந்த சம்பவமே என் மனதைத் தொட்டது.

உளவாளிகளும், துப்பறிவாளர்களும் எவ்வளவு திறமைசாலிகளாக இருந்தாலும், மற்றவர்களிடம் திறமை இருந்தால் அதை மதிப்பார்கள் — அந்தத் திறமையை தக்க தருணத்தில் பயன் படுத்திக் கொள்வார்கள் என்ற தன்னலமற்ற கொள்கையை நமக்கு எடுத்துக்காட்டுவதே. அந்த சம்பவம் என் மனதைக் கவர காரணம் ஆகும்."

இவ்வாறு ஆர். சிவக்குமார் கூறி உள்ளார்.

ராணி காமிக்ஸ்

அடுத்த இதழில்..!

20 ஆண்டுகளுக்கு பிறகும் பழி வாங்கத் துடிக்கும் தளபதிகளின் வீர சாகசம்!



# மாயக்கோட்டை!

முழு நீள சித்திரக் கதை!

திகில் கதை மன்னன் ராம்ஜி எழுதும், எஸ்டேட் பேய்!

துப்பறியும் மர்ம, பேய்த் தொடர்கதை!

படிக்கத் தவறாதீர்கள்!




ரூ.50 பரிசு: வாசகர் போட்டி!

15.9.85-ல் வெளிவருகிறது!